


# சொல்வயல்

திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம் நெல்வளமே நாட்டின்வளம்

" சொற்குவை தேரும் பாவலர் மேவத் தொகுப்பீடம்"
(திருவிளையாடற்புராணம்–
தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்)

ஐ.எஸ்.பி.என் (ISBN): 978-81-958032-0-0

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 6 விளைச்சல் : 66 திருவள்ளுவர் ஆண்டு 2056, துலை (ஐப்பசி) – நவம்பர் – 2025



# தகவல் தொழில்நுட்பவியல் துறைக் கலைச்சொற்கள்

| | |
|---|---|
| Agent architecture | – செய்யறிவுவழிக் கட்டட வரைபடம் |
| Anti spam | – தரவல் குப்பை தவிர்ப்பி |
| Audio mining | – ஒலிப்பகுப்பு முறை |
| Beacon | – ஒளிக்குறிகை |
| Blogging platform | – வலைப்பதிவுத் தளம் |
| Building analytics | – கட்டடப் பகுப்பாய்வு |
| Chatbot | – அரட்டை இயலி |
| Coding theory | – குறியீட்டுக் கோட்பாடு |
| Control code | – கட்டுப்பாட்டுக் குறியீடு |
| Crypto Currnecy | – எண்மப் பணம் |
| Data platform | – தரவுத் தளம் |
| Digital banking | – எண்ம வைப்பகவியல் |
| Digital business | – எண்மிய வணிகம் |
| Digital library | – மின் நூலகம் |
| Fraud intelligence | – மோசடி நுண்ணறிவு |
| Help desk | – உதவிப் பிரிவு |
| Image map | – தட வரைபடம் |
| Information security | – தரவல் காப்பு |
| Machine learning | – இயந்திரவழிக் கற்றல் |
| Mobile app | – கைப்பேசிச் செயலி |
| Network security | – இணையக் காப்பு |
| Process mapping | – செயல்முறை வரைத்திட்டம் |
| Post edit | – பின்னிலைச் செப்பம் |
| Smart meter | – நுண்ணறி அளவி |
| Wizard | – வழிகாட்டி |

சொற்குவை (sorkuvai.tn.gov.in ) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.

# சொல்வயல்


செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு
திருவள்ளுவர் ஆண்டு 2056, துலை (ஐப்பசி) நவம்பர் – 2025

ஆசிரியர் : திருமதி க. பவானி
இயக்குநர் (மு.கூ.பொ.)

பொறுப்பாசிரியர் : முனைவர் வே. கார்த்தி

இதழ்க்குழு : திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திருமதி. க. கத்தூரி



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர்,
சென்னை – 600 028.
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.tn.gov.in

Directorate of Tamil Etymological Dictionary Project,
First floor, Urban Administrative office Campus,
No : 75 , Santhome high Road,
MRC Nagar, Chennai–28
Mail id : solvayal@gmail.com
Website : www.sorkuvai.tn.gov.in



ஐ.எஸ்.பி.என் (ISBN ): 978-81-958032-0-0

# தமிழ்ச் சொற்பிறப்பு அறிவோம் – 'அர்'

மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர், 'அர்' என்னும் ஒற்றைச் சொல்லிலிருந்து பல சொற்கள் கிளைத்து வளர்ந்த முறையினைக் கீழ்க்காணுமாறு விளக்கியுள்ளார்.

அர் = ஒலிக்குறிப்பு
அரவம் = ஒலி
அரா, அரவு, அரவம் = இரைவது, ஒலியறிவது, பாம்பு
அரி = அர் என்னும் ஒலி தோன்றச் சிறிது சிறிதாய்க் கடி அல்லது தின்
அராவு = தேய்
அரம் = அராவுவது
அரம்பம் = அராவுவது, அறுப்பது
அரி = அறு, கோடு (கிளை) + அரி = கோடரி – கோடாரி – கோடாலி
அரிவாள் = அரிக்கின்ற வாள், அரிவாள்மணை
அரி = அழி
அரி = அழிப்பது, பகைவன், அரிமா (சிங்கம்)
கோள் + அரி = கோளரி
அரங்கு = அறுத்த அறை, இசை நாடக மேடை
அரங்கம் = ஆற்றிடை அறுக்கப்பட்ட நிலம். திருவரங்கம் – ஸ்ரீரங்கம்
அரக்கு = தேய், அழி
அரக்கன் = இராட்சதன்
அரன் = அழிப்பவன், தேவன், சிவன்
அரசு = பகைவரை அழிப்பவன், வேந்தன். அரசு + அன் = அரசன்
அரசு = தலைமையான அல்லது தெய்வம் தங்கும் மரம்
அரசன் – அரைசன் – அரையன் – ராயன் – Roy
அர் – அரு = அழி, குறை, நெருங்கு
அருகு = குறைவாகு, நெருங்கு, பக்கம்
அருகண்மை – அருகாமை
அருகன் = நெருங்கினவன், உரிமையுடையவன்
அருகதை = உரிமை
அருமை = குறைவு, கூடாமை, சிறப்பு, விருப்பம்
அருமைவந்த – அருமந்த
அருந்தல் = குறைவு, விலை உயர்வு
அரிது = கூடாதது, வருத்தமானது
அர் = சிவப்பு. அ – இ. ர் – ல்
அரத்தம் = செந்நீர்
அலத்தகம் = செம்பஞ்சுக் குழம்பு
அரக்கு = சிவந்த மெழுகு
அருணன் = சிவப்பு
அருணம் = காலைச் சூரியன்
அரிணம் = சிவப்பு, மான்

இவ்வாறு தமிழ்மொழியின் சொற்பிறப்பு வரலாறு குறித்து மொழிஞாயிறு பாவாணர் எழுதியுள்ள செய்திகளை நாமும் உணர்ந்து வருங்காலத் தலைமுறையினருக்கும் உணர்த்தி அவர்களின் உள்ளங்களில் தாய்மொழிப் பற்றை விதைப்போம்.

# சுடர் தந்த சுல்லும் நுல்லும்



தொடர்ச்சி....


**இரா. திருமாவளவன்**
தேசியத் தலைவர்,
மலேசியத் தமிழ்நெறிக் கழகம், மலேசியா


சுல் எனும் வேர் எப்படி துளைத்தலாலும், தேய்தலாலும் வெப்பப் பொருளைத் தந்து ஒளிப் பொருளையும் தருகின்றதோ.. அதுபோலவே நுல் என்ற வேரும் ஒளிப் பொருளைத் தரும்.

உல் எனும் ஆணிவேர் விளைக்கும் பல்வேறு கருத்துகளுள் தொடுதல், பொருதுதல், துளைத்தல் அடங்கும் என்பது நாம் அறிந்த ஒன்றே.

இவ்வற்றோடு மொழிமுதல் ஆகும் தகுதி உடைய மெய்கள் சேர்ந்தே வேர்களாக பிறக்கின்றன. அவற்றுள் ஒன்றே நுல் ( ந் + உல்= நுல் )

நுல் தரும் பல்வேறு கருத்துகளுள் துளைத்தல் பொருளும் ஒன்றாகும்.

தொடாமல் ஒரு பொருள் மற்றொரு பொருளைத் துளைக்காது. துளைக்கும் வேளை தேய்தல் கட்டாயம் நடக்கும்; தேய்தலில் வெப்பம் உண்டாகும். தேய் எனு வினையாலும் சொல்லாலும் விளைந்ததே தீ என்பார் பாவாணர். அது போலவே நுல் எனும் வேர் துளைக்கும் வேளை தேய்தலால் வெப்புற்று தீயாகி , தீ ஒளியைத் தரும். இங்கு, நுல் துளைத்தல், தேய்தல், வெப்பம், ஒளி முதலான பொருள்களைத் தருவதை நாம் உணரலாம்.

இதன் வழி உல் > நுல் > நுர் = ஒளி எனப் பொருள்பட்டது.

இதே நுர்,
தொல் செமித்திய ( Proto Semitic ) மொழியில் , ஒளி, சுடர் , நெருப்பு எனும் பொருளைத் தரும். நுர் என்ற வேருக்கு இதன் மூலத்தை அல்லது முளையை அம்மொழியில் காட்டவியலாது.

nūr- or *nawār- → meaning "light," "shine," "fire."

| Language/ மொழி | Word/ வேர் | Meaning/ பொருள் |
|---|---|---|
| Akkadian/ அக்காடியன் | nūru/ நூரு l | ight, daylight, brightness |
| Ugaritic/ உகாரிதிக் | nwr/ நுர் | light |
| Hebrew/ இப்ரு | ner (נֵר)/ நெர் | lamp, candle |
| Aramaic/Syriac/ அரமிக் | nūrā/ நூரா | fire, light |
| Ge'ez (Old Ethiopian)/ கீசு | nūr/ நூர் | light, flame |

அரபு மொழியில் நூர் என்றும் அக்காடிய மொழியில் நூரு என்றும் சிரியாக் மொழியில் நூரா என்றும் வழங்கும் நூர் தொல் செமித்திய வேரினின்று சென்றதாகும். இதன் தொடக்கமும் மூலமும் தமிழே என்பதை இதற்கான நுண்பொருள் விளக்கத்தை அதன் முளைப்பினின்று காண்கின்ற வேளை உணர முடியும்.

உல்> நுல் > நுர் = ஒளி

இசுலாமிய சமய நூலான திருமறை குரானில்
அல்லா உலகத்தில் வானகத்தின் ஒளி என்கின்றது.

*Allāhu nūru s-samāwāti wa-l-arḍi* ( குரான் 24:35)

இங்கு நூரு என்பது ஒளி எனும் பொருளுணர்த்துவதைக் காணலாம்.

மேலும் அரபில் சொல்லிடைப் பயின்று ஒளி, நெருப்பு, சுடர் நுர் பொருள் தருவதையும் ஒப்பிட்டுணரலாம்.

| | |
|---|---|
| நூர் ( nūr) | light ஒளி |
| (nār)நார் | fire நெருப்பு |
| | (related form; from same root cluster, originally "shining thing") |
| (munīr)முனிர் | luminous, bright/ சுடர் / ஒளிர் |
| (nawwara)நவ்வாரா | to illuminate, to light up |

The term nur spread widely through Persian, Urdu, Turkish, Malay, and Swahili, mostly through Islamic and Arabic cultural influence:

நூர் எனும் ஒளிப் பொருள் தரும் இச்சொல் வேறு மொழிகளிலும் பயின்றுள்ளது.

| Language | Borrowed Form | Meaning |
|---|---|---|
| Persian / பார்சி | (nūr)நூர் | light, radiance/ ஒளி, கதிர் |
| Urdu/ உருது | (nūr)நூர் | divine light, beauty/ தெய் ஒளி, அழகு |
| Turkish/ துருக்கி | நுர் nur | holy light/ அருள் ஒளி / புனித ஒளி |
| Malay / Indonesian / மலாய் | நுர் nur | light (used in Islamic names like Nurul Islam, Nur Hidayah) ஒளி |
| Swahili/ சுவாகிலி | நுரு nuru | light, brilliance/ ஒளி, பிறங்கல் |

நுர் மலாய் மொழியிலும் காட்டப்பெற்றாலும் அம்மொழிக்கு இச்சொல் அரபினின்றே சென்றது. மலாயர் இசுலாமிய நெறியைத் தழுவியவர் என்பதால் அவர்களின் பெயர்களில் நூர், நூருல், நோரா முதலான முன்னடைகளைப் பரக்கக் காணலாம்.

துளைத்தற் கருத்தில்

நுல் > நொல் > நெல் > நெலி, நெலிதல் ஆகி கடைதல் பொருளை வழங்கும்.

பண்டை நாளில், மாந்தன் காய்ந்த சருகுகளை கல் கடகத்தில் வைத்து ஒரு கோலைக் கொண்டு கடைவதன் வாயிலகத் தீயை உருவாக்கி எரிக்கச் செய்த வரலாறு அனைவரும் அறிந்ததே. இவ்வாறு கடைவதை ஞெலிதல் என்பர். இதனால் அந்தக் கோலுக்கு ஞெலிகடை கோல் எனவும் பெயர் உண்டு.

மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் விளக்கமாய் நுல்லை ஒளிர்தல் கருத்தில் விரிவாய்த் தெளிவுறுத்துவார்.

நெலி > ஞெலி > ஞெலிதல் = தீக்கடைதல், குடைதல், உரசுதல்

ஞெலிகோல் = தீக்கடை கோல்

" ஞெலி கோல் கலப் பை" ( நற்: 142:3)

"ஞெலி கழை" ( ஐங்: 31:7)

ஞெலி > உரசுதலால் தீப்பற்றும் மூங்கில்

ஞெலி மரம் = தீக்கடை மரம் தீக் கடைந்தெடுக்கப் பயன்படும் மரம், "ஞெலி மரத்தினும் மனன் எரி எழ எழ" ( வி.பா: 41:87)

ஞெலிபு = தீயைக் கடைந்து "ஞெலிபு உடன் நிரைத்த ஞெகிழ் இதழ்க் கோடலும்" ( கலி: 101: 4)

நெல் > நெர் > நெரு > நெருப்பு = மூங்கில் உரசுதலால் பற்றும் தீ

இவ்வாறு உருவாகும் தீ, ஒளி தரும்; ஒளியோ ஒளிரும் , சுடரும் எனவே நுல் ஒளிர்தல் பொருளையும் வழங்கிற்று.

உல் > நுல்> நில் > நிலா = ஒளி, ஒளி தரும் திங்கள்

"பசுங்கதிர் மதியத்து அகல் நிலாப் போல" ( நற்: 377:7)

"படை நிலா இலங்கும் கடல் மருள் தானை" ( அக: 212:15)

"முகிழ் நிலாத் திகழ்தரும் மூவாத் திங்கள்" ( அக: 54:17)

உல் > நுல் > நில் > நிலத்தல் = ஒளிவீசுதல்

நிலவல் = ஒளிர்தல் ( பிங்கலம் : 7:181)

நிலவுதல் = ஒளி வீசுதல்

நில் > நிலத்தி = ஒளிரும் மின்மினி ( சூடாமணி )

நில் > நித்தில் = மின்மினி ( நாமதீப : 253)

நில் > நித்திலம் = ஒளிரும் முத்து " நெடுங்கால் புன்னை நித்திலம் வைப்பவும்" (சிறு: 149)

நில் > நிழல் = ஒளி

நிழலுதல் = ஒளி விடுதல்

நிழற்றுதல் = ஒளி விடுதல்

நில் > நிழறுதல் = ஒளிர்தல்

நில் > நிழல் > நிழலி = ஒளி

நில் > நீழல் = ஒளி

நில் > நீழை = ஒளி

நில் > நிழல் > நிகர் = ஒளி

"தாது சேர் நிகர் மலர் கொய்யும் ஆயம்" ( குறு : 311:6–7)

நில் > நிகர்> நிகர்த்தல் = விளங்குதல்

உல் > நுல் > நில் > நிழல் > நிறன் > நிறம் = ஒளிரும் வண்ணம் , ஒளி

"மண்டிலம் மழுக மலை நிறம் கிளர " ( அக : 260:1)

"எந்தையும் நீல் நிறப் பெருங் கடல் புக்கனன்" ( குறு: 269:3–4)

உல்> நுல் > நில் > நெல் = பொன் போல் ஒளிரும் நெற்கதிர்

"செந்நெல் வான் பொரி" ( குறு: 53:4)

"நெல் அரி தொழுவர் கூர் வாள் உற்றென" ( நற்: 195:6)

நுல்> நல்> நள்> நாள் = ஒளிரும் விண்மீன்

நின்று நிலைஇயர் நின் நாள் மீன்... பகைவர் மீனே ( புறம்: 24:24)

நெல் > நெள்> நெழு > நெகு > நெகிழி = நெருப்பு

நெகிழி > நெகிடி = நெருப்பு

"அழல் .....ஞெகிழி....நெருப்பின் பெயரே ( திவாகரம் : 7:52)

நெல் > நெகு > நெகிழி > ஞெகிழி = தீக்கடை கோல் ( நிகண்டுகள் )

"விண் தோய் பணவை மிசை ஞெகிழி பொத்த" ( குறிஞ்சிப் பாட்டு : 226)

ஞெகிழி = கொள்ளிக் கட்டை ( சேணோன் மாட்டிய நறும் புகை ஞெகிழி வான மீனின் வயின் வயின் இமைக்கும்" ( குறு : 10:1–2)

ஞெகிழி = தீச்சட்டி ( ஞெகிழி இந்தளம் நெருப்பு இடுகலமே அனல் குவை இன்ன அக்கினிச் சட்டிப் பெயர்" ( பிங்கலம்: 4: 247)

நுல்> நில் > நிகு > நிகர் = ஒளி "தாது சேர் நிகர் மலர் கொய்யும் ஆயம்" ( குறு: 311:6–7)

நெகு > நகு > நகுதல் = விளங்குதல், ஒளிர்தல் , ஒளிர்ந்து சிரித்தல்

"நகுதல் பொருட்டன்று நட்டல்" ( குறள் : 79:4)

"நகுதல் இலிங்கல் ஒன்பதும் ஒளிவிடுதல்" ( திவாகரம் : 8:58)

நகும் = ஒளிர்ந்து விளங்கும், "உவை ஒண் துறை விண்டு ஒளி விம்மி நகும்" ( சூளாமணி : 805)

நகு > நகை = ஒளி, ஒளிரும் பல், சிரிப்பு, ஒளிரும் பொன் அணிகலன், விளக்கம்

ஒளி > " முகை வாய் திறந்த நகை வாய் முல்லை" ( அகம்: 244: 14)

விளக்கம் > "இலங்கு எயிற்று ஏஎர் இன் நகை மகளிர்" ( நற்: 267: 3)

பல்> "நகை சேர்ந்த இதழினை" ( கலி : 72:12)

முத்துமாலை > "ஒருத்தி செயல்அமை கோதை நகை" ( 92: 33)

சுடர் > ஒண் நகை தகை வகை நெறிபெற" ( பரி: 21:55)

வெண்மை > "நகை மலி முத்து இலங்கும் மணல் சூழ் கிடக்கை ( சம்: தேவாரம் : 2:84:7)

முத்து > "அம் கதிர் மணி நகை அலமரு முலை வளர் கொங்கு அணி குழலவள்" (சீவ: 3: 111)

அணி கலன் > "பொன் நகைக் குலம் பொலிந்து" ( சூளா: 590)

நகைமணி > ஒளியுடைய மணி , "நாவியே கமழும் தொங்கல் நகை மணி வயிரப் பூணான்" ( சூளாமணி : 1131)

நகைமதி > ஒளியுமிழ் நிலவு , நங்கை தன் முகத்தை நோக்கி நகை மதி இது என்று எண்ணி" ( சீவ: 5: 106)

நகு > நகல்> நக்கல் = ஒளி, சிரிப்பு

"நக்கலே நகை" ( சூளாமணி : 11:18)

நகு> நகம் = கை விரல் முனையில் அமைந்துள்ள ஒளிரும் உகிர்.

"இர வணம் அமர் பெயர் அருளினன் நக நெதி" ( சம் : தேவாரம் : 1:123:8)

நகமணி > மலையிற் பிறக்கும் பதுராக மணி, "பகல் ஒளி செய் நக மணியை முகை மலரை" ( சம்: தேவாரம்: 3: 67: 3)

நகு > நகர் = ஒளி வீசித் திகழும் மாளிகை, அவ்வாறான மாளிகைகள் அடங்கிய ஊர்

நகு> நகர் > நகரம் = ஒளிரும் மாளிகைகள் அடங்கிய பேரூர்

"பாழி அன்ன கடியுடை வியல் நகர்"

( அகம் : 15:11)

"நகரம் காவல் நனி சிறந்ததுவென்"

( சில : 4: 84)

"மலைசேர் நகரம் மலை போன்றனவே"

( நீலகேசி : 5:3)

நகரத்தின் வழி மக்கள் வாழ்க்கை சிறத்தலால் இதனின்றே நாகரிகம் எனுஞ் சொல்லும் பிறந்ததாய் பாவாணர் விளக்குவார்.

நகரத்தின் மூலமானது நுல் எனும் ஒளி வேரே. இது உயர்வு நோக்கி ஒளிர்வதால் உயர்வு , வளர்ச்சி நோக்கிய இயக்கம் எனும் பொருளையும் தந்தது.

முடிவு

சுல். எனும் வேரும் நுல் எனும் வேரும் எவ்வாறு ஒளிப்பொருளை நல்கின என்பதைக் காட்டுதற்கே இக்கட்டுரை இவண் வரையப்பெற்றது. மொழிஞாயிறு ஞா. தேவநேயப் பாவாணர் நுணுகி ஆழ்ந்து ஆய்ந்தளித்த வேர்ச்சொல் நுட்பத்தை அடிப்படையாகக் கொண்டே இக்கட்டுரையை யானும் யாத்தனம். பாவாணரின் வேர்ச்சொல்லாய்வு நுட்பம் அறிவியல் காட்டும் வரையறை இயல் விதியினைத் தழுவியது என்பதை உணர்த்துவது என் நோக்கம்.

சுல் நுல் எனும் இவ்விரு வேர்கள் உலக மொழிகளில் பரவியுள்ளன. இந்தோ ஐரோப்பியம், செமித்தியம் முதலான மொழிகளில் வேர்ச்சொற்கள் குறிப்பிட்ட அளவோடு நின்று வித்து வரைச் செல்லாது முட்டுப்படும்.

ஆனால் தமிழில் வித்து வரைச் சென்று அதன் கருவையும் முளைப்பையும் காட்டி நிற்பதோடு ஏன்? எவ்வாறு? எப்படி? எனும் விளக்கத்தையும் விரிவாய் வழங்கும். தமிழே முதன்மொழி எனும் நூலை எழுதிய திரு. இரா. வேங்கடகிருட்டிணன் அவர்கள் அணுச்சொற்கள் என வேர்ச்சொற்களைக் குறிப்பிடுவார்.

பாவாணர்,

வித்து > முளை> வேர் > திரிவு> அடி > முதனிலை என மூலத்தினின்று நுழிமக் கோட்பாடு போல் நுணுகுவார்; விரிப்பார். அறிவியல் வினைகள் வேர்ச்சொல் ஏரணவியல் விளக்கத்திலும் இயைந்திருப்பது கண்டு வியக்கவே தோன்றுகின்றது.

குத்தல்> தேய்தல் ( உரசல் ) > வெப்புறல் > தீயுமிழல் > ஒளி விடல் எனும் தீ உருவாக்கத்திற்கான தெள்ளிய விளக்கத்தை தீ , தேய், தெய்வம் எனுமாப் போலுஞ் சொற்களும் , சுல் நுல் போலும் வேர்களும் வியந்து போற்றுமளவு தெற்றென தெளிவிக்கின்றன. உலக மொழிகளில் தமிழின் வேர்களை இவ்வாறு நுண்ணியவாறு கண்டே பாவாணர் தமிழை முதற்றாய் மொழி என்றார். வெறுமனே , சமற்கிருதத்தை எதிர்ப்பதாகக் கருதி பாவாணர் போட்டியாய் இக்கூற்றினை உதிர்த்தவரல்லர்.

" மொழிப்பொருட் காரணம் விழிப்பத் தோன்றா" ( தொல் : சொல் : 394) என்பது தொல்காப்பியம். வேற்று மொழிகளில் காட்டவியலாத வேர்ச்சொல் காரண நுண் விளக்கங்களைத் தமிழே காட்டிப் பிறங்கும். அதற்குச் சுல்லும் நுல்லும் தெளிதரு சான்றாகும்.

# தொல்காப்பியமும் சொற்றொடர் அமைப்புக் கோட்பாடும்




**முனைவர் இரா.கு.ஆல்துரை**

தமிழ்நாட்டரசின் வீரமாமுனிவர் விருதாளர்


## சொற்றொடர்

மொழியின் அடிப்படை நோக்கமாக விளங்கும். கருத்துப் பரிமாற்றம் எழுத்து, சொல் போன்றவற்றைக் காட்டிலும் முழுமையாகவும் தெளிவாகவும் நிகழ்வது சொற்றொடரில்தான். ஆகையால் மொழியா ராய்ச்சியில் தொடரியலைப் பற்றிய ஆய்வு மிகவும் இன்றியமையான தாகும்.

எழுத்து, சொல் போன்றனவும் பொருள் வெளிப்பாட்டிற்குப் பயன்படுவ னவாக இருக்கின்றன. என்றாலும் எழுத்து, சொல் போன்றனவற்றின் பொருள் வெளிப்பாடு சொற்றொடரில் முழுமையடைவதாக இருக்கிறது.

"தொடர்மொழியின் பொருள் தனிமொழியின் பொருள்களோடு தொடரியல் பொருளும் உடையது. அதனாலேயே பொருள் உணர்த்து வதில் தனிமொழியை விடத் தொடர்மொழி சிறந்தது என்று கருதப் படுகிறது" (சண்முகம் 1984:46–47) என்று குறித்துள்ளது இங்கு நோக்கத் தக்கதாகும். மேலும், சொற்றொடரில் சொற்கள் பெறும் இடங்களை வைத்துத் தான் சொல்வகைப்பாடு செய்யப்படுகிறது (Palmer 1972:94). அதாவது சொல்வகைப்பாட்டிற்கு அடிப்படையானதாக விளங்குவது சொற்றொடர் ஆகும்.

இவ்வாறு இருக்கும்பொழுது தொடரியலை விட்டுச் செய்யும் மொழியாராய்ச்சி முழுமைபெறாத ஆராய்ச்சி யாகும் என்று சொல்லலாம். ஆகையால், தொடரியல் பார்வை கொண்டே எழுத்திலக் கணம், சொல்லிலக்கணம் என்பன சொல்லப்பட் டிருப்பதைக் காணலாம்.

## தொல்கப்பியம்

தொல்காப்பியம் எழுத்து, சொல், பொருள் என்னும் முப்பெரும் அதிகாரங்களைக் கொண்டது. இவற்றுள் எழுத்ததிகாரமும் சொல்லதிகாரமும் மிக விரிவாகத் தமிழ் மொழியின் அமைப்பைப் பற்றிக் கூறுகின்றன. தமிழில் உள்ள எழுத்துகள், அவை பிறக்கும் இடங்கள், சொல், சொற்றொடரில் பெறும் இடம், பெயர், வினை பற்றிய குறிப்புகள், பெயரெச்சம், வினையெச்சம் என்பன போன்ற பலவகையான இலக்கணக் கூறுகள் இவ்விரு அதிகாரங்களில்மிகவிரிவாகவிளக்கப்பட்டுள்ளன. இவ்வடிப்படையில் பார்த்தால் எழுத்திற்கும் சொல்லுக்கும் இன்றியமையாததாக விளங்கும் தொடரியலுக்கு இங்கு ஒரு தனி அதிகாரம் கொடுக்கப் பட்டிருக்க வேண்டும். ஆனால் தொடரியலுக்கென்று தனி அதிகாரம் இங்கு இல்லை.

இவ்வாறு இருக்கும்பொழுது தொடரியலைப் பற்றிய செய்திகள் தொல்காப்பியத்தில் இல்லை என்று சொல்லத் தோன்றும். ஆனால் தொடரியலைப் பற்றிய இலக்கணக் குறிப்புகள் தொல்காப்பியத்தில் இருக்கின்றன. தொல்காப்பியர் இலக்கணம் வகுக்கும்பொழுது சொற்றொடரை மனத்தில் வைத்துக் கொண்டுதான் இலக்கணம் செய்துள்ளார் என்பதைத் தொல்காப்பியத்தைக் கூர்ந்து நோக்கினால் அறியலாம்.

## சொல் வகைப்பாடு

சொற்றொடரில் சொற்கள் பெரும்பாலும் தொடரி (சங்கிலி)த் தொடர்போல் ஒவ்வொன்றும் அடுத்து வருகின்ற சொல்லோடு இணைந்து நிற்கின்றன. இத் தன்மையினை அவாய்நிலை, தகுதி, அண்மை நிலை என முப்பண்புகளாகக் காண்பார் உரைகாரர் சேனாவரையர் (தொல். சொல். 1).

அவாய்நிலையாவது ஒரு சொல் அடுத்து வரும் சொல்லை அவாவி நின்று பொருள் விளக்குவதாகும். ஒரு சொல் மற்றொரு சொல்லோடு தழுவத் தகுதி யுடைத்தாதல் தகுதியாகும். அண்மை என்பது. சொற்களை இடையீடின்றிக் கூறுதலாகும். சிலவிடங்களில் பல சொற்களைக் கடந்து வருகின்ற சொல்லோடும் தொடர்பு கொண்டனவாகச் சொற்கள் வருகின்றன.

ஒரே சொல்லைப் பெயரென்றும், பெயரடை என்றும் கூறுவதற்குக் காரணம் அச்சொல்லின், பொருளன்று. அது சொற்றொடரில் செயல்படும் முறை ஆகும். இதனால் இலக்கண நூலார் சொற்களை வகைப்படுத்துவதற்குச் சில சமயம் பொருளையும், சிலசமயம் செயற்பாட்டு முறையையும் அடிப்படையாய்க் கொண்டிருக்கிறார்கள்.

செயற்பாட்டு முறையைத் தொடரியல் அடிப்படையில் அறிய வேண்டி யுள்ளது.

### மாறும் இயல்பு

சொல்லின் தன்மை இடத்திற்கு இடம் மாறும் தன்மையதாகவும் ஒன்றின் இடத்தில் மற்றொன்று வரும் இயல்பினதாகவும் இருப்பதால் சொல் வகைப்பாடு செய்வதற்கு ஒரு முழுமையான நெறியினைத் தருவது கடினம் ஆகும் (Bloomfield 1933:176). அதாவது ஒரே சொல் தொடரில் நிற்கும் இடத்திற்கேற்ப வெவ்வேறு தன்மையினைப் பெறலாம்.

சான்றாக, ஒரே பெயர்ச் சொல் 'கல்', 'கல் உருண்டது' என்ற தொடரில் எழுவாயாகவும் 'அது ஒரு கல்' என்ற தொடரில் பயனிலையாகவும் வருவதைப் பார்க்கலாம். இதைப்போல் சொற்றொடரில் இடம் பெறும் தன்மைக் கேற்ப ஒரே சொல்லின் தன்மை வெவ்வேறாக இருக்கும். இவ்வாறு இருக்கும்பொழுது தொடரியல் நோக்கு இல்லாமல் வகுக்கும் சொல்லிலக்கணம் தெளிவாக இருக்காது என்று துணிந்து சொல்லலாம்.

இவ்வடிப் படையில் பார்த்தால் விரிவான எழுத்திலக்கணமும் சொல்லி லக்கணமும் தொல்காப்பியத்தில் அமைந்துள்ளன என்பதே அது தொடரியல் பார்வையில் யாக்கப்பட்டுள்ளது என்பதை வெளிப்படுத்தும்.

### இயைபு

சொல்லிலக்கணமும் தொடரிலக்கணமும் சேர்ந்து சொல்லப்படுவது தான் இலக்கணம் (Gleason 1974:128). தொல்காப்பியம் கூறும் எழுத்திலக்கணத்தையும் சொல்லிலக் கணத்தையும் கூர்ந்து நோக்கினால் அதில் இடம் பெற்றுள்ள தொடரிலக்கணச் செய்திகளைக் காணலாம். தொல்காப்பியச் சொல்லதிகாரத்தில் வரும் முதல் நான்கு இயல்களில் தொடரிலக்கணக் குறிப்புகள் மிகுதியாக இருக்கின்றன. மற்ற இயல்களிலும் ஆங்காங்கே தொடரிலக்கணச் செய்திகள் உள்ளன.

தமிழ்ச் சொற்றொடர் அமைப்பை மனத்தில் வைத்துக்கொண்டு சொல்லதிகாரத்தைப் பார்க்க வேண்டும். அப்பொழுது சொல்லைப் பற்றியோ, பிற இலக்கணக் கூறுகளைப் பற்றியோ சொல்லப்படும் நூற்பாக்கள் சிலவற்றில்கூட சொல்லிலக்கணங்களைக் காட்டிலும் தொடரிலக்கணம் சொல்லப்பட்டிருப்பதைப் பார்க்கலாம்

எ–டு: வினையின் தோன்றும் பால் அறி
கிளவியும்
பெயரின் தோன்றும் பால் அறி கிளவியும்
மயங்கல் கூடா தம்மர பினவே
(தொல். சொல். 11)

இந்நூற்பாவில் எழுவாய்க்கும் பயனிலைக்கும் இடையே இயைந்து வரவேண்டிய இயைபு குறிக்கப்பட்டிருக்கிறது. பெயர்ச் சொல்லில் வரும் பால்தான் வினைச் சொல்லிலும் வரவேண்டும் என்று தொடரமைப்பு அமைய வேண்டிய ஒரு இன்றியமையாத கூறு இங்குக் கூறப்பட்டி ருக்கிறது. இதைப் போல் சொற்களை உயர்திணை, அஃறிணை எனப் பாகுபாடு செய்யும் தொல்காப்பியம் அவை தொடரில் ஒருமை, பன்மை போன்ற நிலையிலும் இயைந்து வரவேண்டிய அமைப்பைக் கூறிச் செல்கிறது.

சொல்லதிகாரத்தில் உள்ள பல நூற்பாக்களில் இது போன்ற தொடர்மொழிச் செய்திகள் பல வருகின்றன. சொல்லதிகாரத்திலுள்ள பெரும்பான்மையான நூற்பாக்கள் ஏதோ ஒரு வகையில் தொடரிலக் கணம் கூறுவதைக் காணலாம். எழுவாய்கதும் பயனிலைக்கும் இயைபு (தொல். சொல். 11), பெயருக்கும் பெயரடைக்கும் தொடர்பு (தொல். சொல்.18–26), பல்வேறு வகைப்பட்ட சொல்பாகுபாடு (தொல். சொல்.26,28,38) போன்றன இருக்கின்றன. அவாவி நிற்றல், தகுதி நிலை போன்ற பல செய்திகள் கிளவியாக்கத்தில் இடம் பெற்றுள்ளன.

மேலோட்டமாகப் பார்த்தால் இவ்வியலில் வரும் 61 நூற்பாக்களில் ஐம்பதற்கும் மேற்பட்டன நேரிடையாகத் தொடரிலக்கணம் சொல்கின்ற நிலையைக் காணலாம். கிளவியாக்கம் இணைமொழி, சொற்கள் தம்முள் இயையும் தன்மை முதவியவற்றைச் சொல்வதாக இருப்பதால் அதில் தொடரியல் பற்றிய குறிப்புகள் இருப்பதில் வியப்பேதும் இல்லை.

வேறு வகையில் சொல்ல வேண்டுமென்றால் சொல் வகைப்பாடு முதலியவற்றை விளக்குவதில் தொடரியல் பார்வை கட்டாயமாக இடம்பெற வேண்டும் என்று சொல்லலாம். கிளவியாக்கம், சொல் எவ்வாறு சொற்றொடரில் இடம் பெற தகுதியடைகிறது என்பதை முதன்மையாகக் கூறுவது ஆகும். தெய்வச்சிலையார், 'அதற்குப் பொருள், சொல்லினது தொடர்ச்சி என்றவாறு; சொற்கள் ஒன்றோடு ஒன்று தொடர்ந்து பொருள்மேல் ஆகும் நிலைமையைக் கிளவியாக்கம் என்றார்' என்று கிளவியாக்கத்தின் இயல் பொருள் கூறுவதனால் இதை நன்கு தெரியலாம்.

## பிற இயல்களில்

கிளவியாக்கத்தில் மட்டும்தான் தொடரியல் குறிப்புகள் இருக்கின்றன என்பதில்லை. சொல்லதிகாரத்திலுள்ள அனைத்து இயல்களிலும் இதே நிலைதான் தென்படுகிறது. சான்றாக, வேற்றுமை இயலில் பெயர் வேற்றுமை கொள்ளும்போது அடையும் மாற்றங்களைப் பற்றிய செய்திகள் இருந்தாலும், வேற்றுமை உருபுகளைப் பற்றிச் சொல்வதாக இருந்தாலும் அவை எவ்வகையான பயனிலைகளைக் கொள்ளும் எனச் சொல்லியுள்ளதால் அங்கும் தொடரிலக்கணச் செய்திகள் வருகின்றன.

ஒவ்வொரு சொற்றொடரும் எழுவாய், பயனிலை என்னும் இரண்டு கூறுகளைக் கொண்டது. செயப்படு பொருள் என்பது பயனிலையிலேயே அடங்கும். தமிழ்ச் சொற்றொடரில் ஒருபெயர்ச்சொல் எழுவாயாக மட்டுமல்லாமல் பயனிலையாகவும் வரலாம் என்பதை முன்னரே பார்த்தோம். 'எழுவாய் வேற்றுமை பெயர் தோன்றும் நிலையே' என்று முதல் வேற்றுமையைப்பற்றிச் சொல்லிய பின்,

பொருண்மை சுட்டல் வியங்கொள வருதல்
வினைநிலை உரைத்தல் வினாவிற் கேற்றல்
பண்புகொள வருதல் பெயர்கொள வருதலென்று
அன்றி யனைத்தும் பெயர்ப்பய னிலையே
(தொல். சொல். 66)

என முதல்வேற்றுமை எவ்வகையான பயனிலைகளைக் கொள்ளும் என்பதைச் சுட்டுகிறார். பெயர்கொள வருதல் பெயர் + பெயர் என்ற அமைப்பில் வருதலையும், வேற்றுமைகளைப் பற்றி விளக்கும் போது வேறு வினைகளுடன் சேர்ந்து வரும் இடங்களையும் விளக்குவதில் தொல்காப்பியம் தவறவில்லை.

வேற்றுமை மயங்கியலில் தொடரியல் நோக்கு நிறைந்திருக்கிறது. ஒரு வேற்றுமையுருபு வரவேண்டிய இடத்தில் மற்றொன்று இடம் பெறும் போது வரும் மாற்றங்களை விளக்கும் இயல் இதுவாகும். ஒன்றுக்கு மேற்பட்ட நிலைகள் இடம் பெற்றுள்ளதையும் கவனிக்கலாம்.

அரசர் + ஐ – அரசர் (செயப்படுபொருள்)க்கும், அரசர் + கண்– அரசரில் ஆகிய இரண்டுக்கும் இடையே உள்ள வேறுபாடு வெளிப்படையாகும். இவ்வகை மாற்றம் குறைத்தான், வெட்டினான் போன்றன வரும்பொழுது பயனிலைகளாகப் பொருளற்றதாகி விடுகிறது. இக்காலத் தமிழில் இது போன்று வருமிடங்கள் பல உள்ளன. எ–டு: என்னைக் கேட்டான் – அவன் என்னைக் கேட்டான், என்னிடம் கேட்டான்

ஐ, இடம் என்ற வெவ்வேறு வேற்றுமை உருபுகள் வந்தாலும் பொருள் மாறுபடவில்லை. சில வினைகள் பயனிலைகளாக வரும்பொழுது சொல்லிலக்கண அளவில் தோன்றும் மாறுபாடு தொடரிலக்கண அளவில் இல்லாமலாகிறது. வேற்றுமை மயங்கியல் இது போன்ற வற்றைப் பற்றிப் பேசுகிறது. இக்கால மொழியியல் அடிப்படையில் இலக்கணம் வகுக்கும் மொழியியலாளர்கள் இதுபோன்ற இலக்கணக் குறிப்புகள் தருவதற்குப் பெருமுயற்சி எடுக்க வேண்டியதாய் இருக்கும் என உறுதியாய்க் கூறலாம்.

## இலக்கணம்

இலக்கணக் குறிப்புகள் சுருக்கமாக அமையவேண்டும். சில இலக்கண மாற்றங்கள் நிகழ்வதைத் தெளிவாகச் சுட்டிக்காட்டத்தான் பெயர், வினை போன்ற சொல் வகைப்பாடு செய்யப்படுகிறது. சொல் வகைப்பாடு சொல் அளவில் அல்லது தொடரளவில் அல்லது இரண்டும் சேர்ந்த நிலையில் செய்யப்படும். சொல்லளவில் மாற்றத்திற்கு இடந்தரும் இடம் தொடரளவில் ஒத்துழையாமல் வருமிடங்களும் உண்டு.

எ–டு: சுட்டெழுத்துகளுடன் சேர்ந்து உருவாகும் சுட்டுப்பெயர்களான அவன், இவன், உவன் போன்றன ஒன்றனுக்கு ஒன்று மாற்றாக அமைகின்றன. அதாவது அ+அன், இ+அன், உ+அன் என்று அ, இ, உ மூன்றும் ஆண்பால் ஈறுடன் சேர்ந்து வெவ்வேறு சொற்களாகின்றன. இவ்வாறு இருந்தாலும் சொற்றொடர் இறுதியில் இவை வெவ்வேறு ஈறுகளைக் கொள்வதில்லை.

அவன் வந்தான், இவன் வந்தான், உவன் வந்தான் என்பனபோல எல்லாம் ஒரே மாதிரியாக வருகின்றன. அவனுக்கு வருவதுதான் இவனுக்கும் வருகிறது. அதாவது தொடரமைப்பில் இவை ஒன்றாகவே செயல்படு கின்றன. சுட்டு அண்மை, சேய்மை, இடைமை என்ற பாகுபாட்டினைக் கொண்டாலும் பயனிலையில் வெவ்வேறு ஈறுகள் வருவதில்லை.

## இரு திணை

சொல்லளவில் பால்வேறுபாடு இருந்தாலும் தமிழில் உயர்திணை, அஃறிணை என்ற பாகுபாடு பெரும்பாலும் தொடரியலை அடிப்படை யாகக் கொண்டதாகும். பால் காட்டும் பெயர்கள் ஆண்பால் ஒருமை, பெண்பால் ஒருமை, பலர்பால் (தொல்.சொல்.2) என்ற பாகுபாட் டினையே பெறுகின்றன. ஒருமையில் ஆண்பால், பெண்பால் என்ற பாகுபாடு உள்ளது. அஃறிணை ஒருமை, பன்மை (தொல். சொல்.3) என்ற பாகுபாட்டைக் கொணடுள்ளது. அஃறிணையில் ஆண்பால் பெண்பால் பாகுபாடு இல்லை.

தொல்காப்பியத்தில் இப்பாகுபாடு தொடரியல் அடிப்படையில்தான் கொள்ளப்பட்டிருக்கிறது. எழுவாய்க்கும் பயனிலைக்கும் உள்ள தொடர்பு இப் பாகுபாட்டிற்குள் அடங்கிவிடுகிறது. ஆண்பால் பெயர் ஆண்பால் ஈற்றினைக் கொண்ட பயனிலையுடன் முடியும். பெண்பால் பெயர் பெண்பால் ஈற்றினைக் கொண்ட பயனிலையுடன் முடியும். அதேபோல் அஃறிணை ஒருமைப்பெயர் அஃறிணை ஒருமை ஈற்றினைக் கொண்ட பயனிலையைக். கொள்ளவேண்டும். எ–டு: மணி வந்தான் –மணி (ஆண்), மணி வந்தாள் – மணி (பெண்), மணி வந்தது– மணி (என்ற பெயர்கொண்ட மாடு). இந்நிலையில் பயனிலையில் இடம்பெற்றுள்ள ஈற்றினைக் கொண்டு பெயரின் தன்மையினைக் கூறிவிடலாம்.

பெயரில் பாலைக் குறிக்கும் அடையாளம் வெளிப்படையாக இருக்கலாம். அல்லது மறைமுகமாக இருக்கலாம். வெளிப்படையாக இல்லாத இடத்தில் அதன் தன்மையினை அதனுடன் இயைந்து வருகின்ற பிற கூறுகளிலிருந்து தான் அறியவேண்டும் (Greenberg 1978:49).. அவ்வகையில் இங்கு மணி என்ற பெயரில் பாலீறு வெளிப்படையாக இல்லை. ஆகையால் இங்குப் பயனிலையின் ஈற்றினை வைத்துத்தான் பெயரின் தன்மையினை அறியவேண்டும்.

உயர்திணையில் ஆண்பால், பெண்பால் பாகுபாடு உள்ளதுபோல் அஃறிணையில் ஆண்பால், பெண்பால் பாகுபாடு இல்லை. இதனால் ஆண்புலிக்கும் பெண்புலிக்கும், சேவலுக்கும் பெட்டைக்கும் தமிழிலக்கணம் வேறுபாடு காட்டவில்லை என்று கொண்டுவிடலாகாது. தமிழ் மொழியமைப்பில் அவ்வகைப் பாகுபாடு செய்வதற்குத் தேவை ஏற்படவில்லை என்று கொள்ளுதலே சரியான தாகும்.

## மாற்றுப்பெயர்

சாத்தன், சாத்தி என்ற பெயர்களைப் போலில்லாமல் சேவல், பெட்டை இரண்டும் வந்தது (வந்த+அது) என ஒரேவகையான பயனிலைகளைக் கொள்கின்றன. எ–டு: சேவல் வந்தது, பெட்டை வந்தது

சேவல் பெட்டை இரண்டும் அது என்பதற்கு மாற்றாக அமைகின்றன. அதாவது சேவல், பெட்டை ஆகிய இரண்டு பெயர் (Noun)களின் மாற்றுப்பெயர் (Pronoun) அது வாகும். ஆனால் சாத்தன், சாத்தி என்ற இரண்டு பெயர்களும் முறையே அவன், அவள் என்பனவற்றிற்கு மாற்றாக அமைகின்றன.

## இலக்கணப் பால்

இலக்கணத்தில் பகுக்கப்பட்டிருக்கிற பால் இயற்கைப் பாலுடன் ஒத்துப் போக வேண்டிய தேவையில்லை. இப்பின்னணியில்தான் இலக்கணத்தை நாம் பார்க்க வேண்டும். ஆனால் அவர் (அவர்கள்) வந்தனர், (வந்த அவர்கள்), அவை வந்தன (வந்த அவை) என்பனபோன்ற வடிவங்கள் உயர்திணை, அஃறிணை பாகுபாடு இருப்பதன் தேவையைச் சுட்டுகின்றன.

எழுவாய்க்கும் பயனிலைக்கும், வேற்றுமைகளுக்கும் பயனிலை களுக்கும் இடையே இருக்க வேண்டிய தொடர்பினைத் தொல்காப்பியம் வேற்றுமையியல், வேற்றுமை மயங்கியல் ஆகிய இயல்களில் விளக்கியுள்ளது. பல்வேறு வகையான பயனிலைகளைப் (தொல், சொல். 66) பற்றியும், பயனிலைத் தொடர்பைப் பற்றியும் விரிவாக விளக்கப் பட்டுள்ளன (தொல். சொல். 72,75,76,78).

சொற்றொடரில் பெயரடைகள் பெயர்ச் சொற்களுக்கு முன்னேதான் வரும். இவ்வாறே வினையடை வினைச்சொல்லுக்கு முன்னேதான் வரும். பெயரடையோ வினையடையோ ஒரு சொற்றொடரில் பயனிலையாக வருவதில்லை. பெயரடை, வினையடைகளில் பாலைக் குறிக்கும் அடையாளம் எதுவும் இல்லாமல் வரும். இத்தகைய தொடரமைப்பின் கூறுகள் தொல்காப்பியர் காலத்திலிருந்து இன்றுவரை மாறவில்லை.

## தொடர்பு

தொடர் எச்சத்திற்கும் பெயருக்கும் இடையேயுள்ள தொடர்பு தொல். சொல். 234–இல் விளக்கப்பட்டுள்ளது.

துவைத்த பையன்– துவைத்தலைச் செய்த பையன்

துவைத்த சட்டை– (யாரோ ஒருவரால்) துவைக்கப் பட்ட சட்டை

துவைத்த வழலை– துவைக்கப் பயன்பட்ட வழலை

துவைத்த கூலி– துவைத்தலுக்காக (கொடுக்கப்படும்) கூலி

துவைத்த கல் – துவைத்தலாகிய தொழில் நடை பெற்ற கல்.

துவைத்த வேகம்– துவைத்தலாகிய தொழில் நடைபெற்ற வேகம்.

இவ்விணை மொழிகள் ஒரே அமைப்பைக் கொண்டனவாக இருக்கின்றன. இங்கு இறந்த கால எச்சம் + பெயர் என்ற அமைப்பே இருக்கிறது. ஆனால் வினைக்கும் பெயருக்கும் இடையே

உள்ள தொடர்பு ஒரே மாதிரியானதாக இல்லை.

எழுவாய்– பயனிலைத் தொடர்பு, செயப்படுபொருள் – பயனிலைத் தொடர்பு, கருவி வேற்றுமை – பயனிலைத் தொடர்பு, நான்காம் வேற்றுமை– பயனிலைத் தொடர்பு, ஏழாம் வேற்றுமை – பயனிலைத் தொடர்பு, வினையெச்சம்–பயனிலைத் தொடர்பு ஆகியன இருக்கின்றன.

இவை ஒரே மாதிரியான அமைப்பைப் கொண்டனவாக இருந்தாலும் வெவ்வேறு இலக்கணக் குறிப்புகளைக் காட்டுகின்றன. இங்கு வெவ்வேறு பெயரெச்சப் பெயர்த் தொடர் இருப்பதைக் காண்கிறோம். இவை போன்று வருமிடங்கள் அனைத்தையும் கவனித்தே தொல்காப்பியர் இலக்கணம் யாத்துள்ளார்.

## வேற்றுமை

பல்வேறு வேற்றுமைகளைப் பற்றிச் சொல்லும் பொழுது பல்வேறு வகையான தொடர்புகள் அங்கு இடம் பெற்றிருப்பதைக் காண்கிறோம். வெளிப்படையாக அவை எல்லாம் பல்வேறு வகையான சொற்களி னின்று மாற்றம் பெற்று வந்திருக்கின்றன என்று குறிப்பிடாமல் இருந்தாலும் அந்த அளவிற்குத் தொடர்பினையாவது வெளிப்படுத்தி யுள்ளார். உரையாசிரியர்களும் இவற்றிற்குப் பல்வேறு எடுத்துக் காட்டுகள் தந்து தெளிவு படுத்தியுள்ளனர்.

## இருபொருள்

சொற்றொடர் அமைப்பில் இருபொருள் படுதலைப் பற்றித் தொல்காப்பியர் குறித்துள்ள ஓரிடமும் உண்டு.

நான் பார்த்த கண்ணாடி என்ற சொற்றொடர் நான் பார்த்த கண்ணாடி என்றும், கண்ணாடி வழியாக நான் பார்த்தேன் என்றும் இருபொருள் பட வருகிறது. செயப்படுபொருள் பயனிலைத் தொடர்பு, மூன்றாம் வேற்றுமை உருபு பயனிலைத் தொடர்பு வந்து இங்கு இருபொருள் படுவதைக் காணலாம். இப்பொருள்களை வேறுவகை அமைப்பிலும் சொல்லலாம்.

நான் கண்ணாடியைப் பார்த்தேன்.

நான் கண்ணாடியால் பார்த்தேன்

இதனையே தொல்காப்பியர் வேற்றுமை மயங்கியலில்

தடுமாறு தொழிற் பெயர்க்கிரண்டு மூன்றுங்
கடிநிலை யிலவே பொருள்வயினான
(தொல். சொல். 95).

எனக் கூறுகிறார். பொருள் மயக்கத்திற்கு இடந்தரும் சொற்றொடர் அமைப்புகளில் இரண்டாம் வேற்றுமை, மூன்றாம் வேற்றுமை தரப்படலாம் என்பது இதன் பொருளாகும்.

## முடிவுரை

ஒரு மொழியின் சொற்களை வகைப்படுத்தும்போது பொருளைப் பற்றிய சிந்தனையே ஆகாது என்றும், உருபனியலையும் தொடரனியலையும் அடிப்படையாகக் கொள்ள வேண்டும் என்றும் வண்ணனை மொழிநூலாரில் சிலர் சொல்கின்றனர் (பரமசிவம் 1991:105). ஆனால், இப்படி இலக்கண வாய்ப்பாட்டை வைப்பதில் சில நெறிவிலக்குகள் ஏற்படுகின்றன. அது எவ்வாறாயினும் சொல்வகைப் பாட்டில் தொடரியல் மிகவும் இன்றியமையாததாகும். அவ்வகையில் சொல்வகைப்பாடு தொல்காப்பியத்தில் செம்மையாக நடைபெற் றுள்ளது என்பதே அதில் தொடரியல் செய்திகள் நிறைந்துள்ளன என்பதைத் தெளிவுபடுத்துகிறது. தொல்காப்பியம் முழுமையும் தொடரியல் குறிப்புகள் நிறைந்துள்ளன. வெளிப்படையாகக் குறிப்பிட்டுள்ளவை அல்லாமல் மறைமுகமாகவும் பல தொடரியல் செய்திகள் தொல்காப்பியத்தில் இடம்பெற்றுள்ளன.

## கருவி நூல்கள்

1.) சண்முகம், செ.வை.,1984 சொல்லிலக்கணக் கோட்பாடு–1, உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனம்

2.)தொல். சொல்., சேனாவரையருரை

3.)பரமசிவம், கு.,1991, இக்கால தமிழ் மரபு, கழகம், சென்னை

4.)Bloomfield, L., 1967, Language, George Allen & Unwin LTD, London (first published 1933)

5.)Gleason, H.A.,1974, An Introduction to Descriptive Linguistics, Oxford & IBH,New Delhi

6.)Greenberg, Joseph H., 1978, Universal of Human Language, vol.3, Stanford University Press

7.)Palmer, L. R., 1972, Descriptive and Comparative Linguistics

# முகிலறிவியலின் முன்னோடி நாமே

இலக்குவனார் திருவள்ளுவன்
தலைவர் – தமிழ்க் காப்புக் கழகம்



வான் மழை பெய்யும் முகில் கூட்டம் பல வகையாய் உள்ளது என 19 ஆம் நூற்றாண்டில் அறிவியலாளர்கள் கண்டறிந்தனர். ஆவர்டு (Luke Howard: 1772–1864) என்னும் பிரித்தானிய அறிஞர் வெவ்வேறு வகை முகில் கூட்டம் உள்ளன என உணர்ந்து அவற்றிற்குப் பெயர்கள் இட்டார். என்ற போதிலும் முதல் முறையாக முகில்களின் வேறுபாடுகளை உணர்ந்து வகைப்பாடுகளை விளக்கியவர் இலமார்க்கு (Jean–Baptiste Lamarck:1744–1829) என்னும் அறிவியலாளரே. ஆனாலும் இவ்வேறுபாடுகள் தோற்றத்தின் தன்மையில் கூறப்பட்டனவே தவிர தன்மையின் அடிப்படையில் விளக்கப்படவில்லை.

யோவான் மேசன் (Sir (Basil) John Mason என்னும் அறிஞர்தான் முகில்களின் இயற்பியல் (The Physics of Clouds) என 1957 இல் நூலை வெளியிட்டு முகில்களின் வகைகளைச் சரியாக விளக்கினார். (1994 இல்தான் இதனை அட்டவணைப் படுத்தி விளக்கியுள்ளனர்.)

மழையியல் பற்றி நன்கு அறிந்திருந்த பழந்தமிழர்கள் முகில் அறிவியல் குறித்தும் சிறப்பான அறிவுடையவராக விளங்கியுள்ளனர். முகில்களின் வகைப்பாட்டிற்கு ஏற்ப அவர்கள் சூட்டிய பெயர்களை எல்லாம் அவற்றின் அறிவியல் சிறப்பை உணராமல் முகிலைக் குறிக்கும் வெவ்வேறு பெயர்கள் என நாம் எண்ணி விட்டோம். எனினும் அவற்றுள் சிலவற்றைப் பார்ப்போம்.

| இன்றைய பெயர்கள் | கடல்மட்டத்தில் இருந்து | உயரம் பேரடி (மீட்டர்) |
|---|---|---|
| 1. உயர்முகில் | Cirrus | 9000 |
| 2. குவியடுக்கு | Cirrostratus | 8000 |
| 3. சுருள் குவிவு | Cirrocumulus | 7000 |
| 4. இடை அடுக்கு | Altostratus | 6000 |
| 5. இடைக் குவிப்பு | Altrocumulus | 5000 |
| 6. அடுக்குக் குவிப்பு | Stratocumulus | 4000 |
| 7. குவி முகில் | Cumulonimbus | 3000 |
| 8. திரள் முகில் | Cumulus | 2000 |
| 9. பாவடி முகில் | Stratus | 1000 |
| 10. தாழ் முகில் | Nimbostratus | 0 |

என இன்றைய அறிவியல் அறிஞர்கள் வகைப்படுத்தி உள்ளனர்.

ஆனால், உயர அளவீடுகள் தெரியாவிடிலும் உயரத்திற்கும் முகிலின் தன்மைக்கும் ஏற்ப நம் முன்னோர் வகைப்படுத்தி உள்ளமை வியப்பாக உள்ளது.

கடல் மட்டத்தில் இருந்து எழும் நிலையில் உள்ள முகிலை எழிலி என்றனர். ஐங்குறுநூறு, குறுந்தொகை முதலான பல சங்க இலக்கியங்களில் இச்சொல்லைக் காணலாம். தெய்வப்புலவர் திருவள்ளுவர்

நெடுங்கடலும் தன்நீர்மை குன்றும் தடிந்துஎழிலி

தான்நல்காது ஆகி விடின் (குறள் 17)

என்கிறார். கடலில் இருந்து எழும் நிலையில் உருவாகும் முகிலை எழிலி எனச் சுருக்கமாகவும் அறிவியல் தன்மைக் கேற்பவும் அன்றே கூறியுள்ள சிறப்பு வேறு எங்கும் இல்லையே!

கொண்மூ, கணம், செல், மை, கார், விண்டு, முதிரம், மஞ்சு, விசும்பு, எழிலி என அறிவியல் தன்மைக்கேற்ப முகில் வகைகளுக்குப் பழந்தமிழர்கள் சூட்டியுள்ள பெயர்களை மேலே உள்ள வரிசைக்கேற்பப் பொருத்திக் காண்க.

அறிவியல் மழையில் நனைந்தனர் நம் முன்னோர்! அறியாமை இருளில் மூழ்கியுள்ளோம் நாம்!

நன்றி: அன்றே சொன்ன அறிவியல்

## ஒருபொருட் பன்மொழி – சேறு

அங்கணம்
அசறு
அசும்பு
அள்ளல்
அளக்கர்
அளறு
கும்பி
குழம்பு
குழை
கொள்ளம்

செதும்பு
செய்யல்
சேறு
தொய்யல்
தொள்ளி
தொளி
நுரம்பு
பங்கம்
பூழி

# கப்பும் கறியும்!

முனைவர் ஆ. அரிமாப்பாமகன்
மேனாள் ஆங்கில விரிவுரையாளர்
புதுச்சேரி



"வாடி என் கப்பக்கிழங்கு
எங்க அக்கா பெத்த முக்கா துட்டே
பாடாதே வாயத் தொறந்து

அடி கூடு கட்டுற குயிலே
புது மேட கட்டுற மயிலே
அடி வேப்ப மரத்து வெயிலே
பல வேசம் கட்டுற ஒயிலே
உன்னைக் கண்டதும் நெஞ்சில நிம்மதி வந்தது!"
(கங்கை அமரன், அலைகள் ஓய்வதில்லை).

******

அத்து = பிடிமானம்.
அத்து இல்லாதவன் = எந்தப் பிடிமானமும் இல்லாதவன் = அக்கு தொக்கு இல்லாதவன்.

அ – அவ் – அவ்வு – வவ்வு – கவ்வு;
அவ்வு – அப்பு – கப்பு.

"அத்தி முகவனழ குற்ற பெழைவயிறன்
அப்ப மவரைபொரி ...... அவல்தேனும்
அப்பி யமுதுசெய் மொய்ப்ப னுதவஅட
விக்குள் மறமகளை ......யணைவோனே"
(திருப்புகழ்: 1245).

பொருள்: யானை முகம் உடைய விநாயகன், அழகுள்ள பெட்டி போன்ற வயிற்றை உடையவன், அப்பம் அவரை பொரி முதலியவற்றோடு தேனையும் தொப்பையில் நிரப்பி உண்ணும் வலிமையை உடையவன் உதவி செய்ய, காட்டில் வேடப்பெண்ணாகிய வள்ளியை அணைபவனே!
அப்பு = நிறைய வாரி உண்ணுதல்.

'கைத்தல நிறைகனி யப்பமொ டவல்பொரி
கப்பிய கரிமுக ...... னடிபேணிக்
கற்றிடு மடியவர் புத்தியி லுறைபவ
கற்பக மெனவினை ...... கடிதேகும்'
(திருப்புகழ்: 1).

பொருள்: கைத்தலத்தில் நிறைந்துள்ள பழம், அப்பம், அவல், பொரி (இவற்றை) வாரி உண்ணும் யானை முகக் கடவுளின் திருவடிகளை விரும்பி, அறிவு நூல்களைக் கற்கும் அடியவர்களுடைய மனத்தில் நீங்காது வாழ்பவனே, நினைத்தவற்றை அளிக்கும் கற்பகமே, என்று உன்னைத் தொழுதால் வினைகள் யாவும் விரைவில் ஓடிப் போய்விடும்!
கப்பு = நிறைய வாரி உண்ணுதல்.
அப்பு – கப்பு = கைகளால் பற்றி, வாருதல்.

"கடுத்தது பிழைக்குவது ஆயின் தொடுத்த
கை விரல் கவ்வும் கல்லாக் காட்சிக்,
கொடுமரம் பிடித்த கோடா வன்கண்
வடி நவில் அம்பின் ஏவல் ஆடவர்"
(அகநானூறு: 215).

கடுத்தது பிழைக்குவது ஆயின் = குறிவைத்த ஒன்று தப்பித்துவிடுமாயின்,
கைவிரல் கவ்வும் = கை விரல்களைக் கடிக்கும்,
கொடுமரம் = வில்.
கவ்வும் = கடிக்கும்.

கப்பு – (கவ்) – கவ்வு – கவ்வி = பற்றி,
"எண்ணரு நலத்தினாள் இணையள் நின்றுழி,
கண்ணொடு கண் இணை கவ்வி ஒன்றை ஒன்று
உண்ணவும் நிலைபெறாது உணர்வும் ஒன்றிட
அண்ணலும் நோக்கினான் அவளும்
நோக்கினாள்."
(கம்பராமாயணம், பாலகாண்டம்,
மிதிலைக் காட்சிப் படலம்: 35).

* இரண்டும் ஒரே நேரத்தில் நடந்ததால் 'அண்ணலும் – அவளும்' என்ற உம்மையை 'நிகழ்வது தழீஇய எச்ச உம்மை' என்று கூசாது கூறலாம். (பெரும்புலவர் சுந்தரசண்முகனார், இயல் தமிழ் இன்பம், நிகழ்வது தழீஇய எச்ச உம்மை).

* பண்டைய இலக்கண உரையாசிரியர்கள், 'இறந்தது தழீஇய எச்ச உம்மை', 'எதிரது தழீஇய எச்ச உம்மை' என இரண்டு மட்டும் கூறியிருக்கப் பேரா. சுந்தரசண்முகனார் 'நிகழ்வது தழீஇய எச்ச உம்மை' ஒன்றை நிறுவி எடுத்துக்காட்டுடன் விளக்கியிருப்பது தமிழின்பத்தை நமக்கு ஊட்டுவதாகும்!

* கண் இணை கவ்வி = கண்கள் தம் இணையாகிய கண்களைப் பற்றி / கவ்வி!
கவவு = பற்றுதல், அணைத்துத் தழுவுதல்.

"'காதலற் பிரியாமல், கவவுக் கை ஞெகிழாமல்,
தீது அறுக!' என ஏத்தி, சில் மலர் கொடு தூவி,"
(சிலப்பதிகாரம், மங்கல வாழ்த்துப் பாடல்: 61–62).

'தப்பும் தவறும்' என்பது போன்ற இணைசொல் 'கப்பும் கவரும்'!
கப்பும் கவருமாக வளர்தல் = கிளைவிட்டுத் தழைத்து வளர்தல்.
கப்பு, கவர் = கிளை.
கப்பு = பற்று.
கிளைகளில் வாழும் குரங்கு –
கோடுவாழ் குரங்கு – கப்பி எனப்பட்டது. இப்போது குரங்கைக் குறிக்கும் 'கப்பி' எனும் சொல் 'கபி' – – என இந்தியில் வழங்குகிறது.

'கப்' எனப் பிடித்தல் என்ற ஒலிக் குறிப்புச் சொல் 'கபக்', 'கபால்' எனவும் மக்கள் வழக்கில் வழங்கிவருகிறது.
'கபக், கபக்' என விழுங்கினான் என்று அடுக்குக்கிளவியாகவும் பயன்படுகிறது.
கப் – கப்பு – கப்புதல் = நிறையத் திணித்தல்.
கப்புதல் = நிறையக் கொள்ளுதல் – நிறையப் பிடித்தல் – கொள்ளளவு ~ capacity!

கல் – கர் – கரு – கருகருத்தல் – கறுத்தல்.
கரு – கறு – கறி = மிளகு.
மிளகு போன்று காரம் தருவது மிளகுக்காய் –
மிளகாய் = 'சுள்' எனக் காரும் சுள்ளிக்காய் (chilly).

காய்கறி = காயும்கறியும்(மிளகும்) = கறிகாய், (உம்மைத்தொகை).
கறி = மிளகு, piper nigrum, (nigrum, negro – கறுப்பு.)
"கறி வளர் அடுக்கத்துக் களவினில் புணர்ந்த
செம் முக மந்தி செய்குறி கரும் கால்"
(நற்றிணை: 151).

"கறி வளர் சிலம்பின் கடவுள் பேணி
அறியா வேலன் வெறி என கூறும்
அது மனம் கொள்குவை அனை இவள்
புது மலர் மழை கண் புலம்பிய நோய்க்கே"
(ஐங்குறுநூறு: 243).

" .... சேரலர்
சுள்ளியம் பேரியாற்று வெண் நுரை கலங்க
யவனர் தந்த வினை மாண் நன்கலம்
பொன்னொடு வந்து கறியொடு பெயரும்
வளங்கெழு முசிறி"
(அகநானூறு: 149).

சுள்ளி என்று பண்டைக்காலத்தில் அழைக்கப்பட்ட பேரியாறு இப்போது பெரியார் எனத் தவறாக அழைக்கப்படுகிறது.
பெருமை + யாறு, பெரு – பேர் + யாறு = பேரியாறு.
நன்கலம் = பெரிய கலங்கள் = கப்பல்கள்.
பொன்னொடு வந்து கறியொடு பெயரும் = பொன்னைக் கொடுத்து மிளகு வாங்கிச் சென்றனர்.
நாம் மிளகைக் கொடுத்துவிட்டு இப்போது மிளகாயை வாங்கி உண்கிறோம்! ஏமாறுவதே தமிழர் தொழிலாகிப் போனது!

"கேட்டறியாதன கேட்கின்றேன் கேசவா கோவலர் இந்திரற்குக்
காட்டிய சோறும் கறியும் தயிரும் கலந்து உடன் உண்டாய் போலும்
ஊட்ட முதல் இலேன் உன்தன்னைக் கொண்டு ஒருபோதும் எனக்கு அரிது
வாட்டம் இலாப் புகழ் வாசுதேவா உன்னை அஞ்சுவன் இன்றுதொட்டும்"
(நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம்: 251).

கடி – கறி – கறித்தல் = கடித்து உண்ணுதல்.
"விதையர் கொன்ற முதையல் பூழி
இடு முறை நிரப்பிய ஈர் இலை வரகின்
கவைக் கதிர் கறித்த காமர் மடப் பிணை
அரலை அம் காட்டு இரலையொடு வதியும்"
(நற்றிணை: 121).

"மென் பூ வாகை புன் புறக் கவட்டு இலை
பழம் கன்று கறித்த பயம்பு அமல் அறுகை
தழங்கு குரல் வானின் தலைப்பெயற்கு ஈன்ற"
(அகநானூறு: 136).

கடித்து, கறித்து உண்ணும் இறைச்சி = கறி, ஆட்டுக் கறி ...
(ஒ. நோ: மடி – மறி, வழிமறித்தல்).
"தேன்கறி கற்ற கூழைச்
செண்பக மாலை வேற்கண்
ஊன்கறி கற்ற காலன்
ஒண்மணித் தடக்கை வைவேல்
கூன்பிறை நுதலோர் கூற்றங்
குவிமுலை நமன்கைப் பாசம்
யான்பிற னளியன் வாழ்வான்
ஆசைப்பட் டிருக்கின் றேனே"
(சீவகசிந்தாமணி: 1487).
பொருள் : ஊன்கறி கற்ற காலன் தடக்கை ஒண்மணி வைவேல் – ஊனைத் தின்னக் கற்ற, காலனுடைய பெரிய கையிலுள்ள ஒள்ளிய

மணியிழைத்த கூரிய வேலாகும்!

ஒரு முறை கடும் உணவுப் பற்றாக்குறை ஏற்பட்ட போது திருவாங்கூரை ஆண்ட ஆயில்யத்திருநாள் இராமவர்மா (1860–1880), அவரது இளவல் விசாகத்திருநாள் இராமவர்மா (1880–85) ஆட்சிக் காலத்தில் மரவள்ளிக்கிழங்கு பிரேசில் நாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டு உணவாக அறிமுகப்படுத்தப்பட்டது. எப்படி அவித்து உண்ண வேண்டும் எனவும் மக்களுக்கு அறிவுரை வழங்கப்பட்டது.
பிரேசிலில் இருந்து கப்பலில் வந்த இக் கிழங்கு "கப்ப(ல்)கிழங்கு" என்று அழைக்கப்படலாயிற்று!
இரண்டாம் உலகப்போர்க் காலத்தில் இது மக்களுக்கு முதன்மை உணவாக மாறியது.
இன்றும் கேரளப் பகுதிகளில் இது 'கப்பக்கிழங்குதான்'!

கொடியில் விளைந்த வள்ளிக்கிழங்கு உண்டு வந்த தமிழர்கள் மரத்தின் கீழ் விளைந்த இதை மரவள்ளிக்கிழங்கு என்றனர்.
"கொடிநிலை கந்தழி வள்ளி என்ற
வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும்
கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே"
(தொல்காப்பியம்: 3–85).
வள்ளன்மை உள்ள கடவுளை வாழ்த்தும் துறையாக வள்ளி இருந்துள்ளது.

கிழங்கைக் குறிக்கும் வள்ளி:
வள்ளி என்பது கிழங்கு தரும் கொடி. இது மலைகளில் தானே படரும். மாவலி எனப்படும் மாவள்ளிக் கிழங்குக் கொடியே இங்கு வள்ளி எனக் குறிப்பிடப்படுகிறது. இந்த மாவலிக் கிழங்கை இக்காலத்தில் ஊறுகாய் போடப் பயன்படுத்துகின்றனர்.
"குல்லை பிடவம் சிறுமாரோடம்
வாழை வள்ளி நீள் நறு நெய்தல்
தாழை தளவம் முள் தாள் தாமரை"
(குறிஞ்சிப்பாட்டு: 78–80).

"சிறுகுடியீரே சிறுகுடியீரே
வள்ளி கீழ் வீழா; வரை மிசைத் தேன் தொடா;
கொல்லை குரல் வாங்கி ஈனா மலை வாழ்நர்
அல்ல புரிந்து ஒழுகலான்;"
(கலித்தொகை: 39).
கீழ் = கிழங்கு.
சங்க இலக்கியம் குறிப்பிடும் வள்ளிக் கொடியும் கிழங்கும் இதுவே. ஆள்வள்ளி எனப்படும் மரவள்ளிக்கிழங்கு இறக்குமதியான கப்ப(ல்) கிழங்கே! தஞ்சை மாவட்டப் பகுதிகளில் இது 'சவாரிக் கட்டை' எனவும் கூறப்படும்.

மரவள்ளிக் கிழங்கு ஆங்கிலத்தில் tapioca எனப்படுகிறது. < tipi'ọka. (இது இக் கிழங்கினால் வரும் திப்பியை – பசையைக் குறிப்பதாகவும் இருக்கலாம்.)

tapioca என்பது பிரேசிலில் வழங்கிய 'துப்பி'(Tupi) மொழிச்சொல். ஒரு காலத்தில் பிரேசில் முழுவதும் வழங்கிய இம்மொழி மறைந்து இப்போது இதன் கிளை மொழியான 'நீங்கடு' உள்ளது. துப்பி மொழியும் தமிழ் போல ஒரு கொளுவுநிலை (agglutinative) மொழியாகும். பன்னிரண்டு உயிர் எழுத்துகளைக் கொண்டது. கீழே தரப்பட்டுள்ள அம் மொழிச் சொற்கள் தமிழோடு ஒருங்குவைத்து எண்ணத் தக்கனவாக உள்ளன.

kaa = forest / bush / plant = கா.
u = food = உ, உண்.
arasy = ara + sy (day + mother) = mother of day: the sun = அர – அரு – அருக்கன்.
ịande + ỉara (our + Lord) = எங்க(ள்) இறை.

capacity (n.):
early 15c., "ability to contain; size, extent;" also "ability" in a legal, moral, or intellectual sense, from Old French capacite "ability to hold" (15c.), from Latin capacitatem (nominative capacitas) "breadth, capacity, capability of holding much," noun of state from capax (genitive capacis) "able to hold much," from capere "to take," from PIE root *kap– "to grasp."

curry (n.)
kind of sauce or relish much used in Indian cookery, from the leaves of a southwest Asian plant related to the lemon, 1680s, from Tamil (Dravidian) kari "sauce, relish for rice," also "a bite, bit, morsel." As "meat or vegetable stew flavored with curry powder," 1747 in British English.

Tapioca is derived from the word tipi'ọka, its name in the Tupị language spoken by natives when the Portuguese first arrived in the Northeast Region of Brazil around 1500. This Tupị word is translated as 'sediment' or 'coagulant' and refers to the curd-like starch sediment that is obtained in the extraction process.



# வள்ளுவத்தில் புலம் – ஒப்புருப் பொருண்மை

பேரா. முனைவர் ப. கொழந்தசாமி,

அரசினர் ஆய்வு நிறுவனம், புதுச்சேரி.

இலக்கியங்கள் இன்புறுத்துவதோடு அறிவுறுத்தவும் விழைவதால் அதற்கான உத்திகளைப் பின்பற்றுகின்றன. குறிப்பாக அறப் பனுவல்கள் விழுமியங்களை விளம்புகையில் எளிமையையும் எண்ண ஈர்ப்பையும் முதன்மைப்படுத்தி, பூ, விலங்கு போன்ற காட்சிப் பொருள்களையும் தொன்மக் கதைகளையும் குறிப்பிட்டு/ஒப்பிட்டு நவில்கின்றன. இதனால் பொருட்புலப்பாடு முழுமையடைகின்றது. வள்ளுவம் புலம் என்னும் ஒன்றன்பாற் பெயர்ச்சொல்லை இங்ஙனம் பெய்துள்ளதைக் குறிப்பிடுவதாக இக் குறிப்புரை இயல்கின்றது.

புலம் என்னும் சொல் அறிவுத் துறை, நுண்ணறிவு, விளைநிலம், திக்கு, இடம், பொறியுணர்வு, நூல் போன்ற பொருள் சுட்டுகின்ற ஒப்புருச் சொல்லாகத் தொன்றுதொட்டு இயல்கின்றது. இதைத் திருக்குறள் நுட்பமாகப் பெய்வதைப் பின்வருகின்ற குட்பாக்களால் அறியலாம்.

தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்கு
ஐம்புலத்தாறு ஓம்பல் தலை (43)

என்னும் குறட்பாவில் முதலில் தொன்ம நம்பிக்கைப்படி, இறந்த முன்னோர் தென்திசையில் இருப்பதாக, திசை என்னும் கருத்திலும் அடுத்து இடம் என்றும் இயல்கின்றது.

வித்தும் இடல்வேண்டும் கொல்லோ விருந்தோம்பி
மிச்சில் மிசைவான் புலம் (85)

என்னும் குறட்பாவில் விளை நிலம் என்னும் கருத்தில் அமைகின்றது.

இலமென்று வெஃகுதல் செய்யார் புலம்வென்ற
புன்மையில் காட்சி யவர் (174)

என்னும் குறட்பாவில் பொறி [உணர்வு] என்னும் கருத்தில் பயில்கின்றது.

அடல்வேண்டும் ஐந்தன் புலத்தை விடல்வேண்டும்
வேண்டிய எல்லாம் ஒருங்கு (343)

என்னும் குறட்பாவில் பொறியுணர்வு என்னும் கருத்தில் இயல்கின்றது.

நுண்மாண் நுழைபுலம் இல்லான் எழில்நலம்
மண்மாண் புனைபாவை யற்று (407)

என்னும் குறட்பாவில் நுண்ணறிவு என்னும் கருத்தில் அமைகின்றது.

ஆற்றின் நிலைதளர்ந் தற்றே வியன்புலம்
ஏற்றுணர்வார் முன்னர் இழுக்கு (716)

என்று, அறிவாளரவையைச் சுட்டுகின்றது.

இங்ஙனம் புலம் என்னும் சொல்லைப் பல கருத்தில், பொருட்களன்/ தொடர்ப் பொருட் சூழல் அடிப்படையில், ஒப்புருச் சொல்லாக வள்ளுவம் ஆண்டுள்ளது.

சொற்கள் கருத்தின் அடையாளமாக / குறியீடாக நிலைப்பதால், மனித மாண்பைப் பாடுபொருளாகக் கொண்ட வள்ளுவம் சொற்களின் பண்பறிந்து பயன்கொண்டுள்ளதால், மொழித்திறன் மேம்பாட்டுக்கும் பொருண்மை ஆய்வுக்கும் வாய்ப்பாகின்றது.

# அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 191,192–ஆம் கூட்டங்கள்




தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 191, 192ஆம் கூட்டங்கள் முறையே 14.10.2025, 16.10.2025 ஆகிய இருநாள்கள் நடைபெற்றன.

அகரமுதலி இயக்கக இயக்குநர் (மு.கூ.பொ.) திருமதி க. பவானி அவர்கள் தலைமையில் நடைபெற்ற கூட்டங்களில், அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் இரா.கு. ஆல்துரை, 'அறிவியல் ஒளி' திங்களிதழ் ஆசிரியர் திரு.நா.சு.சிதம்பரம் ஆகியோர் பங்கேற்றனர். மேலும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் தமிழ்மொழி (ம) மொழியியல் புல உதவிப் பேராசிரியர் முனைவர் நா. சுலோசனா, தமிழார்வலர் திரு. கோ.பிச்சைவள்ளிநாயகம் மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் பங்கேற்றனர்.

இவ்விரு கூட்டங்களிலும் சேர்த்து மொத்தம் 539 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

ஏற்பளிக்கப்பட்டுள்ள சொற்களுள் சில:

| | |
|---|---|
| Automotive cluster | தானியங்கு ஒருங்குகாட்டி |
| State of bulwark | காப்பரண் நிலை |
| Desalination plant | உவர்நீக்கு ஆலை |
| Digital financial tool | எண்மிய நிதிக் கருவி |
| Diversified economy | பன்முகப் பொருளியல் |
| Freight cost | சரக்குக் கட்டணம் |
| Geo politics | நிலத்தரசியல் |
| Heavy engineering hub | திண்பொறியியல் நடுவம் |
| Industrial housing | குடியிருப்பமை தொழிலகம் |
| International furniture park | பன்னாட்டு அறைகலன் மண்டலம் |
| Knitwear | பின்னலாடை |
| Land bank | நிலவள வங்கி |
| Leather cluster | தோல் தொழிலிடம் |
| Medical devices park | மருத்துவக் கருவிகள் தொழிலகம் |
| Mega textile park | சவளிப் பெருஞ்சந்தை |
| Polymer industries park | பல்படித் தொழிற் சந்தை |
| Alligatorfish | முதலை மீன் |
| Bait box | மீனிரைப் பெட்டி |
| Bottom fishing | கடலடி மீன் பிடிப்பு |
| Bulk shot selling | குறுகியநேரப் பெரு விற்பனை |
| Controller float | மின்னூட்டக் கட்டுப்படுத்தி |
| Doctor fish | கல் குறவை மீன் |
| Drift fishing | நீரோட்ட மீன்பிடித்தல் |
| Anti fall back | வீழ்ச்சித் தடுப்பு |
| Back cast | பின்னோக்குப் பாய்வு |
| Bail arm | மீன்பிடி கொக்கி |
| Bait rocket | மீனிரை ஏவி |
| Bait–clip | மீனிரைக் கவ்வி |
| Bank fishing | கரையோர மீன்பிடிப்பு |
| Bankstick | தூண்டில் கோல் |
| Broad fin shark | அகல் துடுப்புச் சுறா |

# நாளும் விளையும் சொற்கதிர்
























நாளும் விளையும் சொற்கதிர்

ROUTER திசைவி

தரையூர்தி

ROVER

நாளும் விளையும் சொற்கதிர்

நாளும் விளையும் சொற்கதிர்

KEYBOARD

விசைப்பலகை / இசைப்பலகை

நாளும் விளையும் சொற்கதிர்

PLASTERS

மருந்தொட்டி

நாளும் விளையும் சொற்கதிர்

ஈப்பு

Jeep

நாளும் விளையும் சொற்கதிர்

TRACTOR ஏருந்து

ஈரடுக்குப் பேருந்து

நாளும் விளையும் சொற்கதிர்

NON STOP BUS

இடைநில்லாப் பேருந்து

படுக்கைப் பேருந்து

நாளும் விளையும் சொற்கதிர்

SLEEPER BUS

சிற்றுந்து

Mini bus

நாளும் விளையும் சொற்கதிர்

நாளும் விளையும் சொற்கதிர்

சிறு சுமையுந்து

MINI LORRY

VAN

மூடுந்து/கூண்டுந்து

நாளும் விளையும் சொற்கதிர்

நாளும் விளையும் சொற்கதிர்

சாலையுருளை

ROADROLLER

சரக்குந்து

TRUCK

நாளும் விளையும் சொற்கதிர்